27th April 1960]

MR. SPEAKER: The question is—

"That the Legal Practitioners' (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 6 of 1960), be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, I move—

"That the Legal Practitioners' (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 6 of 1960) be passed."

The motion was put and carried and the Bill was passed.

## (4) THE MADRAS DISTRICT COLLECTORS' POWERS (DELEGATION) AMENDMENT BILL, 1960.

(L.A. Bill No. 15 of 1960.)

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

"That the Madras District Collectors' Powers (Delegation) Amendment Bill, 1960 (L.A. Bill No. 15 of 1960) be taken into consideration."

கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா கொண்டுவருவதனுடைய நோக்கம், ஜில்லாக்களிலே பல அபிவிருத்தித் திட்டங்கள் இப்பொழுது எடுத்துக்கொள்ளப்பட்டு வருகின்றன. அந்த அபிவிருத்தித் திட்டங்களுக்கெல்லாம் மேற்பார்வை அதிகாரியாக இருக்கக்கூடியவர் ஜில்லா கலெக்டர் தான். இதன் காரணமாக இன்றைக்கு ஜில்லா கலெக்டர்களின் வேலைப் பளு அதிகமாக இருக்கிறது என்பதை நாம் காண்கிறோம். அதுவும் இப்பொழுது இருக்கக்கூடிய ஜில்லா அளவை வைத்துக்கொண்டு ஜில்லா கலெக்டரே எல்லாக் காரியங்களையும் கவனிப்பது என்று சொன்னால், அது அநேகமாக முடியாத காரியமாக இருந்து வருகிறது. இதன் காரணமாக அபிவிருத்தி வேலைகள் கூட தாமதப்பட நேரிடுகிறது. தடைப்பட நேரிடுகிறது. இதைத் தவிர்ப்பதற்கு இரண்டு விதத்தில் தான் முடிவுசெய்ய முடியும். ஒன்று ஜில்லாவை இரண்டாகப் பிரிக்க வேண்டும், பெரிய ஜில்லாக்களை. இப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையில் அது ஒரு சாத்தியமான காரியமாகத் தெரியவில்லை. ஏனென்று சொன்னால், இப்பொழுது பல புதிய முறையிலே நிர்வாக அமைப்பை ஏற்படுத்த வேண்டும் என்று முயற்சி செய்து பஞ்சாயத்து சட்டத்தை இயற்றியிருக்கிறோம். பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் இவைகளெல்லாம் ஏற்பாடு செய்வதற்கு நாம் இன்றைக்கு முயற்சி செய்து வருகிறோம். ஜில்லாவை இரண்டாகப் பிரிக்க வேண்டுமென்ற ஒரு பிரச்னையை இப்பொழுது எடுத்துக்கொள்ள முற்படுவோமானால், நிர்வாகம் சீர்கெட்டுப் போய்விடுமோ என்ற அச்சம் ஏற்படுகிறது. ஆகையினால் தான் வேறு விதமாக இதை எப்படி தீர்ப்பது என்பதைப் பற்றி யோசனை செய்து, கலெக்டர்களுக்கு இருக்கக்கூடிய சட்டபூர்வமான அதிகாரங்களை வேறு ஒரு அதிகாரி ஏற்று நடத்துவதற்கு ஒரு வாய்ப்பு ஏற்படுத்தவேண்டியிருக்கிறது. இன்றைக்கு இருக்கக்கூடிய பல்வேறு சட்டங்களின் கீழ் கலெக்டர்கள்தான் சில அதிகாரங்களை செலுத்துவதற்கு அந்தச் சட்டங்களில் இடம் இருக்கிறது. இதை சர்க்கார் உத்தரவு போட்டு மாற்ற முடியாது. ஆகையினால்தான் ஜில்லா அளவிலே இருக்கக்கூடிய பல்வேறு பணிகளைப் பிரித்து, ஜில்லா ரெவின்யூ ஆபீஸர் என்ற ஒரு உயர்தர அதிகாரியை நியமித்து அவர்கள் பல காரியங்களை பார்த்துக் கொள்ளும்படியாக ஏற்பாடு செய்துவிட்டு, பாக்கி அபிவிருத்தித் திட்டங்களையும், மற்ற முக்கியமான காரியங்களையும் கலெக்டர்கள் பார்க்கவேண்டும் என்கின்ற முறையை ஏற்பாடு செய்வதற்காக சர்க்காருக்கு அதிகாரம் அளிக்க

கூடிய விதத்தில் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதை கனம் அங்கத்தினர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த அதிகாரங்கள் பிரிக்கப்படும்பொழுது "நோட்டிபிகேஷன்கள்" மூலம் பிரிக்கப்படும். அந்த "நோட்டிபிகேஷன்கள்" இதிலே இருக்கக் கூடிய 5-வது பிரிவின்படி இந்த சபையின் முன்னாலே வைக்கப்படும். அதை இந்த சபையில் விவாதிப்பதற்கு இடம் இருக்கிறது. ஆகையினால் எந்த முறையில் அதிகாரம் பிரிக்கப்படுகிறது என்பது பற்றி இந்தச் சபையும் கவனிப்பதற்கு அவகாசம் இருக்கிறது. இந்த மசோதாவை சபை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras District Collectors' Powers (Delegation) Amendment Bill, 1960, be taken into consideration."

SRI A. R. SUBBIAH MUDALIAR : தலைவர் அவர்களே, Statment of Objects and Reasons-ல் . . . . . officers above the rank of Deputy Collectors should be appointed so that they could deal independently with most matters of Land Revenue and General Administration ' என்று கண்டிருக்கிறது.

இயற்கையாகவே ஜில்லா நிர்வாகத்தில் அபிவிருத்தி திட்டங்களையும் சேர்த்திருப்பதினால் கலெக்டர் அவர்களுக்கு நிர்வாகத்தை நடத்துவது கஷ்டமாக இருப்பது தெரிய வருகிறது. பின்னால் 4-வது கிளாஸில் பார்க்கும் பொழுது "Delegation of powers of District Collector" என்ற தலைப்பின் கீழ், முதலில் ரெவின்யூ ஆபீசருக்கு கவர்ன்மெண்டு நோடிபிகேஷன் மூலமாக "ஆதரைஸேஷன்" கொடுக்கப்பட்டிருக்கிறது. அதே கிளாஸில் கூர்ந்து கீழே கவனிக்கும்பொழுது ஜில்லா கலெக்டரிடமிருந்து அந்த பவரை பிரித்ததாகத் தெரியவில்லை. அவர் நினைத்தால் "Provided that no authorization under this section shall prevent the District Collector from exercising, in such cases as he deems fit, all or any of the powers exercisable by any other officer by virtue of the authorization aforesaid,". "as he deems fit" என்று கண்டிருக்கிறது. "Officer above the rank of Deputy Collectors" என்று போடும்பொழுது, அந்த அதிகாரி கொஞ்சம் பழுத்த நிர்வாகப் பழக்கம் உள்ளவராக இருப்பார். ஆகையால் அவருக்கு இண்டிபெண்டன்ட் 'பவர்' கொடுத்தால்தான் அவர் நிர்வாகத்தை நல்ல நிலைமையில் நடத்துவதற்கு ஒரு வாய்ப்பு ஏற்படும். இதிலே செக்ஷனிலே பார்த்தால் டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் தலையிட்டு விட்டால், இவர்கள் பவர் போய்விடுகிறது. நிர்வாகத்தில், ரெவின்யூ ஆபீஸருக்கு பவர்களை இண்டிபெண்டன்டாக வைப்பது நலம் என்று கூறிக்கொண்டு முடிக்கிறேன்.

SRI M. P. SUBRAMANIAM : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, கனம் சுப்பையா முதலியார் பேசிய கருத்தை நானும் வலியுறுத்த விரும்புகிறேன். ஜில்லா கலெக்டர்களுக்கு கூடுதலான வேலைகள் இருப்பதால், இன்னும் சில ரெவின்யூ அதிகாரிகளை நியமிக்கப் போகிறோம். ஆனால் அதே வேலைகளைக் கலெக்டர்களே தொடர்ந்து செய்யத் தடையில்லை என்று குறிப்பிட்டிருக்கிறது. அதில்லாமல், புது அதிகாரிகளே செயலாற்றச் செய்வது தான் நல்லது. கலெக்டர்கள் தலையிட வேண்டுமென்று சொல்லவில்லையென்றாலும், தலையிட இடம் இருக்கிறது. அது அவசியமில்லை. கலெக்டரின் அந்தஸ்தோ அல்லது ஏறக்குறைய அந்த அந்தஸ்து உள்ள அதிகாரிகளை நியமிக்கப் போகிறோம். ஆகவே தான் இந்த மாதிரி கலெக்டருக்குத் தொடர்ந்து தலையிடும் அதிகாரம் தேவையில்லை என்கிறேன். ஏனென்றால் ரெவின்யூ அதிகாரிகள் இருக்க மாட்டார்கள் என்று கருதினால் கலெக்டர் அவர்களை அணுகி காரியத்தை சாதிக்க இடமேற்படும்.

அதற்கு அடுத்தபடியாக, அமைச்சரவர்கள் ஜில்லாக்களை இரண்டாகப் பிரிப்பது இடையூறுகளை உண்டு பண்ணக்கூடியது என்று சொன்னார்கள். உண்மையிலேயே கலெக்டர் அவர்களுடைய அதிகாரம் இரண்டாகப் பிரிக்கப்

27th April 1960] [Sri M. P. Subramaniam]

படுகிறது ; மற்ற காரியங்களெல்லாம் இப்பொழுது இருக்கும் முறையிலே செயல்படும் என்று தெரிகிறது. கலெக்டர் நேரிடையாக கண்காணிக்க முடியவில்லை என்றும், கஷ்டங்கள் நீங்கவேண்டும் என்றும் சொல்லப்படு கிறது. இப்பொழுது, சேலம், கோவை முதலிய பெரிய மாவட்டங்களிலே, பல காரியங்கள் சம்பந்தப்பட்ட வரையில் இரண்டு மாவட்டங்களாக பாவித்துச் செயல்பட்டு வருகிறது. உதாரணமாக, அங்கெல்லாம் இரண்டு டி.ஈ.ஒக்கள் ; கல்வி, விவசாயம், கூட்டுறவு முதலிய இலாகாக்களிலே இரண்டாக அமைந்திருக்கிறது. சேலத்தில் வடக்கே ஒரு கல்வி அதிகாரி, தெற்கே ஒரு கல்வி அதிகாரி ; வடக்கே ஒரு விவசாய அதிகாரி, தெற்கு ஜில்லாவிற்கு ஒரு விவசாய அதிகாரி ; அதே போல, கூட்டுறவு இலாகா விலும், வட ஜில்லாவுக்கு ஒரு அதிகாரி, தென் பகுதிக்கு வேறொரு ஜில்லா அதிகாரி. இப்படி பெரிய மாவட்டங்கள் இரண்டாகப் பணி புரிவ தால், கலெக்டர்களும் ஏன் இப்படி இந்த அடிப்படையில் இருக்கக் கூடாது என்பது புரிந்துகொள்ள முடியவில்லை. நிர்வாகத்தில் மாற்றம் ஏற்படப் போகிறது என்று சொல்லும் வேளையில், இதையும் கவனிக்க வேண்டும். சில மாவட்டங்களிலே தலைமை ஆபீசுக்கு வருவதற்கு குறைந்தது 200 மைல் போக வேண்டியிருக்கிறது. ஹோசூரிலிருந்து சேலம் வர 110 மைல்களுக்கு மேல் கடந்து செல்ல வேண்டியிருக்கிறது. அந்த நிலை தவிர்க்கப்படவேண்டும். இரண்டு அதிகாரிகள் அளவுக்கு இன்றைக்கு தனித்தனியாக அதிகாரங்கள் பிரித்துக் கொடுக்கும் போது, கலெக்டர் அளவிலும் இரண்டாகச் செய்வதில் என்ன சிரமம் இருக்க முடியும் ? அப்படிச் செய்தால் திறமையாக நடக்கும். இடையூறுகள் ஏற்படாமல் செய்ய முடியாதா என்று கேட்க விரும்புகிறேன். ஆகவே, இந்த ஜில்லாக் களையும் இரண்டாகப் பிரிப்பதற்கும் ஆவன செய்யவேண்டும். இப்படி வேலையளவில் இரண்டாகப் பிரிப்பதே முடிவாக இருக்கக்கூடாது என்று சொல்லிக்கொண்டு முடிக்கிறேன்.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர் களே, கலெக்டர்களுக்கு அதிகமான வேலைகள் இருந்து வருகிறது என்பதை ஒருவரும் மறுக்க முடியாது. ஆனால், இந்த மசோதா மூலமாக, வேலை களைப் பிரித்துக் கொடுப்பதன் மூலமாக அது எவ்வளவு தூரம் குறையும் என்று புரியவில்லை. முக்கியமாக பெரிய மாவட்டங்களில், சேலம், கோயம் புத்தூர், மதுரை போன்ற மாவட்டங்களில், இரண்டு கலெக்டர்களைப் போட்டு வேலைகளைப் பார்த்து வரலாம் ; மற்ற மாவட்டங்களிலும் கூட ஒவ்வொரு கலெக்டருக்கும் பர்சனல் அசிஸ்டெண்ட்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கும் சில அதிகாரங்களைப் பிரித்துக் கொடுக்கலாம். தவறு இல்லை. இப்படி மாவட்டங்களிலே டீசென்ட்ரலைசேஷன் செய்து பவர்களைப் பிரித்துக் கொடுத்தால் வேலைகள் துரிதமாக நடைபெறும். முன்பு பேசிய அங்கத்தினர் சொன்ன பிரகாரம், தனியாக சீனியர் டெபுடி கலெக்டர்களைப் போடுவதுதான் நேர்மையாக இருக்கும். சட்ட பூர்வமாக வேலையைப் பிரித்துக் கொடுத்து, கலெக்டருக்கு சம்பந்தம் இல்லை என்று ஏற்படுத் தினாலொழிய, வேலை குறையுமா என்று யோசிக்க வேண்டும். இதற்காக ஒரு லட்ச ரூபாய் வரை அதிகச் செலவாகிறது. இப்பொழுது லக்ஷம் என்று ஆரம்பித்து, பின்னிட்டு போகப் போக தொகை அதிகமாகுமே தவிர, குறையப் போவதில்லை. எது எப்படியிருந்த போதிலும், வேலைகளை சட்ட பூர்வமாகப் பிரித்துக் கொடுத்து, ஒவ்வொருவருக்கும் என்ன வேலை என்று அலாட் செய்தாலொழிய, கலெக்டர்களுக்கு வேலைப் பளு குறையாது. பெரிதான மூன்று மாவட்டங்களிலே இரண்டாகப் பிரித்துக் கொடுத்தால், வேலைகள் துரிதமாக நடைபெறும் என்று நான் அபிப்பிராயப் படுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : சபாநாயகர் அவர்களே விவாதத்திலே பொதுவாகக் குறிப்பிடப்பட்ட, இந்த அதிகாரத்தை பிரித்துக் கொடுக்கும்போது, அதைச் சட்ட பூர்வமாக தனித்தனியாகச் செய்வது, பொதுவாக ஒரு அதிகாரியிடம் மேல்பார்வை பார்க்கும் அதிகாரம் கொடுப்பது ஆகிய இந்த இரண்டு கருத்துக்கும் இடம் இருக்கிறது. அடிஷனல் கலெக்டர் என்று போட்டு, அவருக்கு தனிப்பட்ட அதிகாரம் கொடுத்து, அதிலே கலெக்டருக்கு எந்தவிதமான மேல் பார்வை பார்க்கும் அதிகாரமும் இல்லாமல் செய்வது ஒன்று ; பிரித்துக் கொடுத்து விட்டு,

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [27th April 1960

கலெக்டரை மேற்பார்வை பார்க்க, ஓவர்ஆல் அதாரிடி, அவரிடம் இருக்கவேண்டும் என்பது மற்றொன்று. நிர்வாகத்தை நல்ல முறையிலே நடத்த அந்த லெவலில் யாருக்கு அந்த பூர்ண அதிகாரம் கொடுக்க வேண்டும் என்பதைப் பற்றி கலெக்டர்கள் கான்பரன்ஸ், செக்ரடரிகள் கான்பரென்ஸ், இதிலெல்லாம் இது நல்ல முறையிலே ஆலோசனை செய்யப்பட்டு, பரிசீலனை செய்யப்பட்டு, விவாதித்து, கடைசியில், அடிஷனல் கலெக்டர் என்று போட்டு, கலெக்டருக்கு மேல்பார்வை அதிகாரம் கொடுப்பது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அங்கே குழப்பம் ஏற்படுமானால், அதைத் தடைப்படுத்த சக்தி, அதிகாரம் இருக்கக்கூடிய ஒரு கலெக்டர் இருந்தால்தான், அந்த ஜில்லாவிற்குப் பொறுப்பாக இருக்க முடியும். இதையெல்லாம் ஆலோசித்து இம்மாதிரிச் செய்வதுதான் நல்லது என்ற முடிவுக்கு வந்திருக்கிறோம். கடைசியாக ஜில்லாக்களை இரண்டாகப் பிரிப்பதன் மூலமாகத்தான் பிரச்சினையை நல்ல முறையிலே தீர்க்க முடியும். ஆனால் அதை உடனடியாகச் செய்வதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. இது ஆலோசனை செய்யப்பட்டது. அப்படிப் பிரிப்பதானால், புதிய ஜில்லா ஹெட் க்வார்ட்டர்ஸ் ஏற்படுத்த வேண்டும்: புதிய கட்டடங்கள் கட்டவேண்டும். அப்படி ஏற்பாடு செய்வதானால், 20, 25 லக்ஷம் செலவாகும். இப்பொழுது ஒரு லக்ஷம் அதிகம் செலவாகும் என்று சொன்னார்கள். அப்பொழுது ஒவ்வொரு ஜில்லாவுக்கும் அதிகச் செலவு செய்தாகவேண்டும். ஆகவே, அதை உடனடியாக எடுத்துச் செய்யக் கூடிய நிலையில் இல்லை. பல விஷயங்களைப் பார்க்க வேண்டியிருக்கிறது. ஜில்லா காரியாலயங்களை ஏற்படுத்தவேண்டும். அதெல்லாம் மிகச் சுலபமான காரியம் இல்லை. இப்பொழுது இருக்கும் நிலையில், அதைச் சமாளிக்க இந்த அடிப்படையில் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது.

ஆகையினால் இந்தச் சட்டத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும். இதில் இருக்கக்கூடிய வாதப் பிரதிவாதங்கள் தெரியாதது அல்ல. இந்த இரண்டு கருத்துக்களையும் சீர்தூக்கிப் பார்த்து இப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையில் இது தான் சரி என்று எல்லா அதிகாரிகளும் கலந்து ஆலோசித்து ஒரு முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஆகவே இந்த மசோதாவை ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

Mr. SPEAKER: The question is—

"That the Madras District Collectors' Powers (Delegation) Amendment Bill, 1960 (L.A. Bill No. 15 of 1960) be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2, 3 and 4 were put and carried.

*Clause 5.*

Mr. SPEAKER: The motion is—

"That clause 5 do stand part of the Bill."

Sri T. T. DANIEL: Sir, I wish to bring to the notice of the Government one thing. As the Bill stands, the Collector can interfere and take away the powers if he thinks it necessary. Instead of that, he should be made to interfere subject to the approval of his action by the Government. If the clause is modelled on these lines, I think it will be all right. The present position seems to be very anomalous.

Mr. SPEAKER: I am afraid, the hon. Member is speaking with reference to clause 4 which has already been passed. We are now on clause 5.

27th April 1960]

Clause 5 was put and carried.

Clause 6 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

"That the Madras District Collectors' Powers (Delegation) Amendment Bill, 1960 (L.A. Bill No. 15 of 1960) be passed."

MR. SPEAKER: The question is—

"That the Madras District Collectors' Powers (Delegation) Amendment Bill, 1960 (L.A. Bill No. 15 of 1960) be passed."

The motion was put and carried and the Bill was passed.

### (5) THE MADRAS JUDICIAL PROCEEDINGS (REGULATION OF REPORTS) BILL, 1960

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

"That the concurrence of the Legislative Council be obtained for setting up a Joint Select Committee of both the Houses consisting of 21 members (14 members of the Legislative Assembly and 7 members of the Legislative Council) to consider the Madras Judicial Proceedings (Regulation of Reports) Bill, 1960 (L.A. Bill No. 12 of 1960) and that the following members of the Legislative Assembly be selected to serve on such a Joint Select Committee:—

1. The Hon. Sri C. Subramaniam.
2. The Hon. Sri M. Bhaktavatsalam.
3. Sri T. T. Daniel.
4. Sri T. Sampath.
5. Sri V. S. Manikkasundaram.
6. Sri P. Ramachandran.
7. Srimathi T. N. Anandanayaki.
8. Sri A. P. C. Veerabahu.
9. Sri V. Vedayyan.
10. Sri M. P. Subramaniam.
11. Sri P. S. Chinnadurai.
12. Sri Sowdi S. Sundara Bharathi.
13. Sri D. S. Authimoolam.
14. Sri M. Kalyanasundaram."

இந்த மசோதாவும் பத்திரிகைகளைப் பொறுத்தது. நேற்றைய தினம் ஒரு மசோதாவை இங்கே பிரேரேபிக்கும்போது பல மோசமான விஷயங்கள் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படுவதைப் பற்றிக் குறிப்பிட்டேன். இப்படிப் பட்ட ஆபாசமான விஷயங்களை வேறு எங்கிருந்தும் பொறுக்குவது சுலபம். இப்படிப்பட்ட கேசுகள் ஏராளமாக கோர்ட்டுகளில் வருகின்றன. ரேப் கேஸ்கள் வருகின்றன. வாலிப பெண்கள் ஈடுபடக் கூடிய கேஸ்கள் பல வருகின்றன. அவைகளை எடுத்து பிரசுரிக்கிறோம் என்ற முறையில் ரொம்பவும் ஆபாசமான முறையில் இவைகள் எல்லாம் பிரசுரிக்கப்படுகின்றன. பல பத்திரிகைகளுக்கு இங்கு சட்டசபைக்கு வருகிற நிருபர்களைப் போல் இருக்கிறார்கள். அவைகளைப் பற்றிய விஷயங்களை சேகரிப்பதற்கு என்று சில நிருபர்கள் இதே வேலையாக இருக்கிறார்கள். அவர்களுக்கு